# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 12 | ஜூலை 10, 2022 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 12 | July 10th, 2022 | Annual Subscription Rs. 100/-



## யானையை இழுத்துச் சென்ற காட்டாற்றில் இறங்கிக் குளிப்பது எவ்வாறு ?

# வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் குற்றாலத்தில் 3 நாள் ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 3 நாள் நேரடி ஞான முகாம், குற்றாலத்தில் நடைபெற உள்ளது.

நாள்: 13-08-22 சனிக்கிழமை காலை 8.00மணிமுதல் 15-08-22 திங்கட்கிழமை மதியம் 3.00 மணி வரை

இடம்: **BWDA Institute of Development Finance - BID-FIN.** பழைய குற்றாலம் ரோடு, குற்றாலம் - 627802.

செலவு பகிர்வு ரூ.**5000/-** நபருக்கு

(உணவு மற்றும் தங்குமிடம் உட்பட)

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 12-08-22 அன்று வெள்ளிக்கிழமை மாலைக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.

குளுகுளு குற்றாலத்தில் ஞான முகாம் நடைபெறுவதால் ஆனந்தமாக அருவியில் குளித்து ஞானத் தெளிவு பெற்று மகிழ்வுடன் செல்லலாம். குடும்பத்துடன் கலந்து கொள்வது சிறப்பு.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளன.

தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கவும்.

முன் பதிவுக்கு

**+917904118421, +919994205880, +919789165555**

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-636003.

**9994205880, 9789165555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075




# யானையை இழுத்துச் சென்ற காட்டாற்றில் இறங்கிக் குளிப்பது எவ்வாறு ?



- ஸ்ரீ பகவத்

நெல்லை மாவட்டத்தின் ஜீவ நதியான தாமிரபரணி ஆறு பொதிகை மலையிலிருந்து உற்பத்தியாகி ஓடி வருகிறது. அந்த நதியின் ஆரம்பகட்டத்தில் இரண்டு நீர்த்தேக்கங்கள் உள்ளன.

அந்த நீர்த் தேக்கங்களுக்கும் மேலாக அந்த ஜீவ நதியானது ஒரு காட்டாறாகவே ஓடி வருகிறது. அதன் உற்பத்தி ஸ்தானத்தை பாணதீர்த்தம் என்று அழைப்பர்.

நாங்கள் ஒரு முறை அந்த பாண தீர்த்தத்தை நோக்கி நடைப்பயணமாக சென்றிருந்தோம்.

நீர்த் தேக்கங்களுக்கும் மேலாக உள்ள அந்தக் காட்டாற்றின் கரையோரமாகவே நடந்து சென்றோம்.

நாங்கள் சென்றது ஒரு மழைக்காலம். அந்தக் காட்டாறு பயமுறுத்தும் அளவில் மிகப் பயங்கரமாக ஆர்ப்பரித்து ஓடிக் கொண்டிருந்தது. ஒரு சாமியார் தான் எங்களுக்கு வழிகாட்டியாக வந்திருந்தார்.

நாங்கள் செல்வதற்கு இரண்டு தினங்களுக்கு முன்னால் ஒரு குட்டி யானையை அந்த ஆறு அடித்துச் சென்று விட்டது என்று அந்தச் சாமியார் கூறினார்.

அந்த ஆறு அவ்வளவு காட்டுத்தனமாக இருந்தது. பெரிய யானையைக் கூட அடித்துச் சென்று விடும் அளவுக்கு அவ்வளவு பயங்கரமாக இருந்தது. குட்டி யானையை அடித்துச் சென்றுவிட்டது என்றால் அதில் எந்த ஆச்சரியமும் இல்லை.

எங்களை அழைத்துச் சென்ற சாமியார் ”நாமும் இந்த ஆற்றில் இறங்கி குளிக்கலாமா?” என்று கேட்டு எங்களுக்கு இன்னுமோர் அதிர்ச்சியைக் கொடுத்தார்.

அவர் விளையாட்டாகக் கேட்பதாக எண்ணி நாங்களும் விளையாட்டாக சம்மதம் தெரிவித்தோம்.

அவரும் அதை சீரியசாக எடுத்துக் கொண்டு குளிப்பதற்கான இடத்தைத் தேட ஆரம்பித்துவிட்டார்.

நாங்கள் பயந்து போனோம். நாங்கள் அவரிடம், ”நீங்கள் இறங்கி குளியுங்கள்! நாங்கள் கரையில் இருந்தே வேடிக்கை பார்க்கிறோம் !” என்று கூறினோம்.

கடைசியில், அவர் பார்த்துக் கொடுத்த இடத்தில், நாங்கள் அனைவருமே இறங்கிக் குளித்தோம்.

எவ்வளவு கொடூரமான ஆறாக இருந்தாலும் சரி, அந்த ஆற்றில் கூட இப்படிக் குளிப்பதற்கான சில பகுதிகள் இயற்கையாகவே அமைந்து உள்ளன.

நீங்கள் இனி ஒரு முறை இத்தகைய காட்டு ஆறுகளைப் பார்க்க நேர்ந்தால் நீங்களும் இதனை நேரடியாகவே கவனித்துப் பார்க்கலாம்.

காட்டுத்தனமாக பாய்ந்து ஓடும் ஆற்றின் நீரானது சில இடங்களில் பாறைகளால் தடுக்கப்படுகின்றது. அப்படித் தடுக்கப்படும் பொழுது அந்த நீரோட்டம் திசை மாறி விடுகின்றது. அதனால் ஒரு பக்கம் ஆற்றுநீர் முன்னோக்கிப் பாய்கிறது. அதே இடத்தில் இன்னொரு பக்கம் அந்த நீரே பின் நோக்கியும் பாய்கிறது. இந்த இரண்டு வகையான நீரோட்டங்களுக்கும் மத்தியில் நீரானது சமன்பட்ட நிலையில் ஒரு தேக்கமடைந்த பகுதியாகவே உள்ளது. அது ஓர் தெப்பம் போல் காணப்படுகிறது.

நாங்கள் அந்த இடத்தில் இறங்கி நீச்சலடித்து கூட நிம்மதியாகக் குளித்துவிட்டு கரை ஏறினோம்.

இப்படி காட்டுத்தனமாக இருக்கும் நமது அன்றாடப் பிரச்சினைகளுக்கு மத்தியிலும் கூட, இத்தகைய அமைதிப் பூங்காக்களும் நிறையவே உள்ளன.

அந்த அமைதிப் பூங்காக்கள் நமக்கு உள்ளே இருக்கின்றனவா, அல்லது நமக்கு வெளியே இருக்கின்றனவா?

அந்த அமைதிப் பூங்காக்களை மூடி மறைத்திருக்கும் நமது பிரச்சினைகள் எவ்வாறு தான் உள்ளன?

அந்தக் காலத்தில் பெண்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஸ்வெட்டர் பின்னுவார்கள். நீண்ட ஊசிகளை வைத்திருப்பார்கள். அவற்றை வைத்து அவர்கள் அழகான ஸ்வெட்டர்களைப் பின்னுவார்கள்.

அவர்களது வேலை பல நாட்களுக்கு நீடிக்கும். பல நாட்கள் முயன்றுதான் ஒரு ஸ்வெட்டரை அவர்களால் பின்ன முடியும்.

அந்த ஸ்வெட்டரில் ஏதாவது ஒரு நூலைப் பிடித்து இழுத்தோமானால் மொத்த ஸ்வெட்டரும் கலைந்து வெறும் நூலாக மாறிவிடும்.

இப்படித்தான் நம்முடைய எல்லா பிரச்சினைகளுமே உள்ளன. அதனுடைய ஏதாவது ஒரு முடிச்சை அவிழ்த்தோமானால், மொத்த பிரச்னைகளும் கலைந்து அமைதிப் பூங்காவாக மாறிவிடும்.

ஒரு பிரச்சினை, இரண்டு பிரச்சினை என்றால் பரவாயில்லை. ஆனால் வாழ்க்கையே ஒரு பிரச்சினையாக இருந்தால் நாம் என்ன செய்வது ?

ஒரு பிரச்சினைக்கு அடுத்து இன்னுமொரு பிரச்சினை என்று, அடுக்கடுக்காக பிரச்சினைகள் வந்து கொண்டே இருந்தால், நாம் என்னதான் செய்வது ?

உலகில் உள்ள உயிரினங்களை எடுத்துக்கொண்டால், அவை எத்தனையோ வகையாக உள்ளன.

ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன என்று எத்தனையோ விதமான உயிரினங்கள் உள்ளன.

பறவைகளை எடுத்துக் கொண்டால் எத்தனையோ விதமான பறவைகள்; விலங்குகளை எடுத்துக்கொண்டால் எத்தனையோ விதமான விலங்குகள்.

மனிதர்களை எடுத்துக்கொண்டால் எத்தனையோ விதமான மனிதர்கள்.

இப்படி, நமது பிரச்சினை எடுத்துக்கொண்டால் அவை எப்படி உள்ளன?

இருக்கும் பிரச்சினைகளில் எத்தனை வகையான பிரச்சினைகள் உள்ளன?

நோய் என்பது என்ன என்று தெரிந்தால் தான் சரியான மருந்தைக் கொடுக்க முடியும்.

பிரச்சினை என்பது என்ன? அது எங்கே, எப்படி உள்ளது?

அது என்ன விதமான பாதிப்புகளை எல்லாம் ஏற்படுத்துகின்றது?

அண்மையில் சென்னையில் நடைபெற்ற ஞானமுகாம் ஒன்றில் சிறப்பு விருந்தினராக அகில இந்திய இருதயநோய் சிறப்பு மருத்துவ நிபுணரான டாக்டர்.சொக்கலிங்கம் அய்யாவும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார்.

"மாரடைப்புக்குக் காரணம் கொழுப்பு அல்ல. நமக்கு வேண்டிய சக்தி அனைத்தையும் கொழுப்பு தான் கொடுக்கிறது. நமது ஆரோக்கியமான வாழ்வுக்கு கொழுப்பு மிகவும் அவசியம். பிரச்சனை கொழுப்பில் இல்லை. பிரச்சனை அனைத்தும் மனதில் தான் உள்ளன....

"நமது மனதில் கவலைகளின் அழுத்தம் அதிகரிக்கும் போது, அது கார்ட்டிசால் என்னும் ஓர் அமிலத்தை உருவாக்குகிறது. அந்த அமிலமானது இரத்தத்தில் உள்ள கொழுப்பை உடைத்து விடுகிறது. அவ்வாறு உடைக்கப்பட்ட கொழுப்புத் துகள்கள் மட்டுமே இரத்த நாளங்களில் படிந்து அடைப்பாக மாறிவிடுகின்றன."

--- இவ்வாறு அதனை அவர் விவரித்தார்.

நமது பிரச்சினைகள் நமக்குள்ளே இருக்கின்றனவா? அல்லது நமக்கு வெளியே இருக்கின்றனவா ?

மாலை மறைந்து இரவு நெருங்கும் நேரத்தில், ஜென் துறவி ஒருவர் தனது வீட்டு முன்னாலுள்ள தெருவில் எதையோ தேடிக்கொண்டிருந்தார்.

தெருவில் நடந்து சென்றவர்கள் அவருக்கு உதவி செய்ய முன்வந்தார்கள்.

"என்ன தேடுகிறீர்கள் சுவாமி?" என்று கேட்டார்கள்.

"துணியை தைக்கும் போது தையல் ஊசி கீழே விழுந்து தொலைந்துவிட்டது. தையல் ஊசியைத்தான் தேடிக்கொண்டிருக்கிறேன்," என்று அவர் பதில் சொன்னார்.

”ஊசி கீழே விழும்போது எங்கே உட்கார்ந்து துணியை தைத்துக் கொண்டு இருந்தீர்கள்?” என்று உதவி செய்ய முன் வந்தவர்கள் கேட்டார்கள்.

அந்த ஜென் துறவியும், ”வீட்டுக்குள்ளே உட்கார்ந்துதான் துணி தைத்துக் கொண்டிருந்தேன்!” என்று கூறினார்.

வந்தவர்கள் சற்று திகைத்து போனார்கள். ”வீட்டுக்குள்ளே விழுந்த ஊசியை தெருவில் வந்து தேடினால் எப்படி சாமி கிடைக்கும்?” என்று கேட்டார்கள்.

”வீட்டுக்குள் சரியான வெளிச்சம் இல்லை. தெருவில் தான் வெளிச்சம் உள்ளது. வெளிச்சத்தில் தேடினால் தானே எதையும் கண்டுபிடிக்க முடியும்?” என்று அவர் தத்துவம் பேசினார்.

”இருட்டாக இருந்தாலும் ஊசியை எங்கு தொலைத்தீர்களோ, அந்த இடத்தில் தேடினால் தானே அது கிடைக்கும்?” என்று அவர்கள் கேட்டார்கள்.

அவர் சிரித்துக்கொண்டே கூறினார்:” நான் மட்டுமா இப்படித் தேடுகிறேன்? உலகமே இப்படித்தான் தேடிக்கொண்டிருக்கிறது. மகிழ்ச்சியை எங்கு தொலைத்தோமோ அந்த இடத்தில் தேடாமல் வேறு எங்கேயோ தேடிக்கொண்டிருக்கிறது. மனதிற்குள் தொலைந்துபோன மகிழ்ச்சியை மனதுக்குள் தேடாமல் வேறு எங்கேயோ தேடி வருகிறது இந்த உலகம்.”

மகிழ்ச்சியின் இருப்பிடம் எது? பிரச்சினைகளின் இருப்பிடம் எது? நோயின் இருப்பிடம் எது?

அதைத் தெரிந்தால்தானே தீர்வையும் அடைய முடியும்.

அவற்றின் இருப்பிடம் எது? நமக்குள்ளே இருக்கும் நம்முடைய மனதுதான் அவற்றின் இருப்பிடமா?

ஓர் அரசவைக்கு முனிவர் ஒருவர் விஜயம் செய்திருந்தார். மன்னரும் மந்திரிபிரதானிகளும் தங்களுடைய பிரச்சினைகளை எல்லாம் தீர்த்து வைக்குமாறு அவரிடம் கோரினார்கள்.

”உங்களுடைய பிரச்சினைகளை எல்லாம் என்னிடம் ஒப்படையுங்கள். நான் அவற்றையெல்லாம் என்னுடைய சக்தியால் தீர்த்து வைக்கிறேன்”, என்று அந்த முனிவர் அவர்களிடம் கூறினார்.

மன்னர் பணிவாகக் கூறினார்: ”பிரச்சினைகள் வெளியே இருந்தால் அவற்றை உங்களிடம் சுலபமாக ஒப்படைத்து விடலாம். ஆனால் இருக்கின்ற பிரச்சினைகளெல்லாம் எங்களுக்குள்ளே எங்கள் மனதில் தான் உள்ளன. எங்கள் மனதில் இருக்கும் பிரச்சினைகளை உங்களிடம் எப்படி சுவாமி ஒப்படைப்பது? ”

அந்த முனிவரும், ”மனதில் தான் உங்களது பிரச்சினைகள் உள்ளன என்பதாவது உங்களுக்குத் தெளிவாகத் தெரிகிறதா? அல்லது அதிலும் சந்தேகம் ஏதாவது உள்ளதா?”

மன்னரும் அவசரமாக பதில் கொடுத்தார்: ”பிரச்சினைகள் அனைத்தும் மனதில் தான் உள்ளன என்பது மிகவும் தெளிவாகவே தெரிகிறது சுவாமி! அதில் எந்த சந்தேகமும் இல்லை. வெளியே உள்ள பிரச்சினைகள் எவையும் பிரச்சினைகளே அல்ல. மனதில் ஏற்படும் துன்பங்களும் துயரங்களும் தான் பிரச்சினையாகவே உள்ளன. மனதில் உள்ள துன்பங்களையும் துயரங்களையும் நீக்குவதற்கு தான் நீங்கள் வழிகாட்ட வேண்டும் சுவாமி!”

அந்த முனிவரும், ”நீ உறுதியாகக் கூறினால் சரிதான். நீ கூறியதை நானும் ஏற்றுக் கொள்கிறேன். உன்னுடைய பிரச்சினைகள் எல்லாம் உன்னுடைய மனதில் தான் இருக்கின்றன. அப்படித்தான் நீயும் கூறுகிறாய் .அப்படி அது உன் மனதில் இருப்பதாக இருந்தால் அது உன்னுடைய மனதில் எங்கேயாவது ஓரிடத்தில் தான் இருக்க வேண்டும் . அவையெல்லாம் உன்னுடைய மனதின் உள்ளே எங்கே தான் இருக்கின்றது என்று உனக்குள்ளே நீ அதை உற்றுநோக்கிக் கண்டுபிடி. நான் அங்கேயே வந்து அவற்றைச் சரி செய்கிறேன்,”என்று கூறினார்.

தனது பிரச்சினைகள் எல்லாம் தனது மனதில் எங்கே மையம் கொண்டுள்ளது என்று மன்னர் தன்னுடைய மனதின் உள்ளே உற்று நோக்கினார்.

பிறகு அவர், ”சுவாமி! உள்ளே எட்டிப் பார்த்தால் உள்ளே எதுவுமே இல்லையே சுவாமி !” என்று முனிவரிடம் கூறினார்.

இப்போது அந்த முனிவர் மன்னரிடம் கேட்டார்: ”நீ தான் பிரச்சினைகள் இருக்கின்றன என்று கூறினாய். நீ தான் இப்போது எதுவுமே இல்லை என்றும் கூறுகிறாய். உண்மையிலேயே பிரச்சினை என ஏதாவது ஒன்று இருக்கிறதா அல்லது இல்லையா? இருக்கிற பிரச்சினைக்குத் தீர்வு கேட்கிறாயா? அல்லது இல்லாத பிரச்சனைக்குத் தீர்வு கேட்கிறாயா?”

இப்போது நமது கேள்வி என்ன? பிரச்சினை என ஒன்று இருக்கிறதா அல்லது இல்லையா? இருக்கிற பிரச்சினைக்குத் தீர்வு வேண்டுமா அல்லது இல்லாத பிரச்சினைக்குத் தீர்வு வேண்டுமா?



V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# ?கேள்வி பதில்...

## நான் சந்திக்கும் பிரச்சினைகளை எவ்வாறு எதிர்கொள்வது?



**கேள்வி :** நான் இந்தியாவில் பிறந்து கடந்த 30 ஆண்டுகளாக US-ல் வசித்து வருகிறேன் . நான் ஒரு IT கம்பெனியில் MDக்கு அடுத்த நிலையில் இருந்து வேலை பார்த்து வருகிறேன். 300 டீம் லீடர்களை நிர்வாகம் செய்யும் முக்கியப் பொறுப்பில் இருந்து வருகிறேன். தினமும் 18 மணி நேரத்துக்கு குறையாமல் வேலை பார்க்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்து வருகிறேன்.

என்னுடைய தேவைக்கு மிகுதியாகவே எனக்கு வருவாய் கிடைக்கிறது. வருவாய் மிகுதியாக இருந்த போதிலும் என் மனதில் மகிழ்ச்சி என்பதே இல்லை. குடும்பத்திற்கு நேரம் செலவிட எனக்கு நேரமே இல்லை. குழந்தைகளுடன் மகிழ்வாக தளர்வாக விளையாடுவதற்கான வாய்ப்பே இல்லாமல் பணிச்சுமையின் காரணமாக தவிக்கிறேன். இதனால் மனைவி மற்றும் குழந்தைகளிடமிருந்து எனக்கு கிடைக்க வேண்டிய மகிழ்ச்சி கிடைப்பதே இல்லை. நான் கடந்த சில மாதங்களாக youtube-ல் தான் ஸ்ரீபகவத் ஐயா அவர்களை follow செய்கிறேன். என்னை நான் மாற்றிக் கொள்ள என்ன செய்ய வேண்டும்?

நிறைவான செல்வம் இருந்தும் மன நிறைவு ஏற்பட வில்லையே ஏன்? நான் மகிழ்வாக வாழ்வதற்கு ஓர் நல்ல வழியை காட்டும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

**பதில் :** உங்களின் நிலைப்பாடு என்ன என்பது நன்றாக புரிகிறது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அரிய கண்டுபிடிப்பான அகம்-புறம் என்பதை முதலில் தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும்.

நீங்கள் சந்திக்கும் பிரச்சினையில் எது அகம்? எது புறம்? என்பதை தெளிவாகப் பிரித்து புரிந்து கொண்டால் போதும்.

இது ஒரு சாதாரணமான பிரச்சினைதான்.

மனதில் தாமாக ஏற்படும் எண்ணங்கள் உணர்வுகளுக்கு நம்மால் எதுவுமே செய்ய முடியாது.

அது இயற்கையின் இயக்கம் என்பதை முதலில் தெளிவாக மாற்று சிந்தனை இல்லாமல் புரிந்து கொள்ள வேண்டும். இப்படி நாம் புரிந்து கொள்வது தான் பிரதானமானது.

நாம் எதிர்கொள்ளும் பிரச்சினைகளுக்கு அகத்தில் எதுவுமே செய்ய முடியாது என்ற தெளிவும் அதில் உறுதியும் இருக்க வேண்டும்.

இனி புறத்தை எப்படி கையாள்வது என்பதை சிந்திப்போம்.

மிகுதியான வருவாயிலிருந்து 40 சதவீதம் பணத்தை உங்களது வேலையை பார்க்க 3 நபர்களை அமர்த்தி கொள்ளுங்கள்.

உங்களுடைய வேலையை அவர்களுக்கு எடுத்துக் கூறி உங்களது வேலைகளை நிறைவாக செய்து கொள்ளவும்.

3 நபர்கள் கொடுக்கும் தகவல் தொகுப்புகள் மற்றும் உங்களின் தனிப்பட்ட அறிவு நுட்பத்துடன் சேர்த்து நிர்வாகத்திற்கு தேவையான வளர்ச்சி தகவல்களை நிறைவாகவும் திருப்திகரமாகவும் செய்து முடிக்கவும்.

ஒரு நாளுக்கு 2 மணி நேரம் வேலை பார்த்தால் போதுமானது. மீதம் இருக்கும் நேரத்தை குடும்பத்திற்கு

செலவு செய்யுங்கள்.

என்னுடைய இந்த பதிலில் நண்பர் முழுமையான திருப்தியை அடைந்து விட்டார்.

அவர் மேலும் என்னிடம் ஒரு கேள்வியை முன் வைத்தார். எனக்கு ஏன் இந்த மாதிரி புதிய அணுகுமுறை தோன்றவில்லை. அது ஏன்? என்ற ஓர் கேள்வியை முன் வைத்தார்.

அவருக்கு பின்வருமாறு விளக்கத்தை கொடுத்தேன்.

"நீங்களும், நீங்கள் எதிர்கொள்ளும் பிரச்சனைகளும் ஒன்றிணைந்து இருக்கும் போது உங்கள் பிரச்சினை ஏது? அதற்கு நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்ற தெளிவு உங்களிடம் இருக்காது...

"பிரச்சினையை முதலில் தெளிவாக பிரித்து புரிந்து கொண்டால் மட்டும் தான் நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பது உங்களுக்கு தெளிவாகப் புரியவரும்" என்றேன்.

"பிரச்சினையைப் பிரித்துப் புரிந்து கொள்ள முடியாத நிலையில் உங்களால் உங்கள் பிரச்சினைக்கு தேவையான தீர்வை புரிந்து கொள்ளவே முடியாது" என்றேன்.

பிரச்சினையை தலையில் சுமந்து கொண்டிருப்பதில் இருந்து தரை இறக்கி வைத்து விட்டு பிரச்சினையையும் உங்களையும் தனிமைப்படுத்தி– வேறுபடுத்தி பார்க்க தெரிந்தால் மட்டும் தான் நீங்கள் சந்திக்கும் பிரச்சினைக்கு நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பது உங்களுக்கு நிதர்சனமாக புரிய வரும் என்றேன்.

நண்பர் எனது கருத்தை முழுவதுமாக அங்கீகரித்து ஏற்றுக் கொண்டார்.

அடுத்த கேள்வியை கேட்டார்:

"ஏழாவது படிக்கும் எனது இளைய மகள் என்னிடம் ஒரு போதும் அன்பாக நடந்து கொள்வதே இல்லை. அவள் என் மீது அன்பு செலுத்த நான் என்ன செய்ய வேண்டும்?" என்றார்.

அவருக்கு அளித்த பதில் தான் மிகவும் முக்கியமானது.

நீங்கள் 300 டீம் லீடர்களை நிர்வாகிக்கலாம். ஆனால் உங்கள் குழந்தையை பொருத்தமட்டும் நீங்கள் அன்புள்ள அப்பாவாக மட்டும் தான் இருக்க வேண்டும். டீம் லீடர்களை நிர்வாகம் செய்யும் ஓர் அறிவாளியாக இருப்பதை எந்த குழந்தைகளும் விரும்புவதே இல்லை.

அவளுடன் விளையாடாத தந்தையை குழந்தைகள் வெறுக்கத்தான் செய்வார்கள். ஒருபோதும் அன்பு காட்ட மாட்டார்கள். ஏழாவது படிக்கும் உங்கள் மகளின் மனநிலைக்கு நீங்கள் தான் முதலில் இறங்கி அவளுடன் விளையாடி பழகி அவளுக்கு என்ன தேவை என்று புரிந்து கொண்டு அதை செய்யத் தொடங்க வேண்டும். சில நாட்களில் நீங்கள் நினைப்பதை விட அதிகமான மாற்றத்தை நீங்கள் உணர்வீர்கள்" என்று ஒரு பதிலை அளித்தேன்.

கண்களில இருந்து வெள்ளம் போல் கண்ணீரை கொட்டி தீர்த்தார்.

நாம் அறிவு சார்ந்த எத்தனையோ விஷயங்களில் வல்லுனராக இருக்கலாம்.

ஆனால் அவை அனைத்தும் புறச் செயல்களின் வளர்ச்சிக்கு மட்டுமே.

குடும்ப மகிழ்ச்சிக்கு ஒரு பங்கு கூட உதவாது.

நமது காலனியை வெளியில் நாம் செல்லும் அத்தனை இடங்களுக்கும் பயன்படுத்திக் கொள்கிறோம்.

ஆனால் வீட்டிற்கு வரும் பொழுது வாசலுக்கு வெளியே கழட்டி வைத்து விட்டு தான் வீட்டிற்கு உள்ளே செல்கிறோம்.

அதை போல நீங்கள் எவ்வளவுதான் அறிவாளியாக இருந்தாலும் கூட உங்களது குடும்பத்திற்குள் நுழையும் பொழுது உங்களது அறிவாளித்தனம் என்ற செருப்பை கழட்டி வைத்து விட்டு அன்பு காட்டும் குடும்ப தலைவனாகவும் தகப்பனாகவும் கணவனாகவும் நடந்து கொள்ளுங்கள். வாழ்க்கையில் மகிழ்ச்சி கிடைக்கும்.

நண்பர் பரிபூரணமாக மகிழ்ந்து தனது மன நிறைவை தெரிவித்தார்.

தான் செய்து கொண்டிருக்கும் தவறு என்ன என்பதையும் தெளிவாக விளங்கிக் கொண்டார்.

மன நிறைவுடன் தனது நன்றிகளை தெரிவித்து விடை பெற்றார். ★



# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

பகவத் பாதை மாத இதழில் ஞானம் – முக்தி, விடுதலை என்ற வார்த்தைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து அதனை விவரித்து வருகிறோம்.

'ஞானம் அடைவது எளிதானது' என்றும் 'சாதாரண மனிதர்களும் ஞானிகளாகலாம்' என்றும் கூறி வருகிறோம்.

ஓர் அன்பர் அலைபேசியில் தொடர்பு கொண்டு என்னிடம் இப்படி கேட்டார்:

"ஐயா எனக்கு ஒரு சந்தேகம், ஓர் ஞானி தன்னை ஞானி என்று வெளிப்படுத்திக் கொள்வாரா? ஞானி என்பவர் ஒரு துறவியாக அல்லவா இருப்பர்? அவர் உலகில் உள்ள பந்தபாசங்களோடு இணைந்திருப்பாரா? அல்லது விலகி இருப்பாரா?"

பலருக்கும் இப்படிப்பட்ட ஒரு கருத்து இருக்கிறது.

ஏன் இப்படிபட்ட கருத்துகள் தோன்றுகின்றன? காரணம், ஞானம் என்றால் என்ன என்ற கருத்தையே பலரும் பலவிதமாக வைத்துள்ளனர்.

'ஞானி என்பவர் முக்காலம் உணர்ந்தவர், அமானுஷ்ய சக்தி பெற்றவர், எப்போதும் புன்னகையோடு சாந்த சொரூபமாக இருப்பவர், எப்போதும் ஆழ்ந்த அமைதியில் இருப்பவர்' இது போன்ற பல கருத்துக்களை கொண்டுள்ளனர்.

காரணம் பல சினிமாக்களிலும் கதைகளிலும் இவ்வாறு கூறப்பட்டுள்ளன.

உண்மையில் இதுவல்ல ஞானம்.

ஞானம் என்றால் என்னவென்றே தெரியாதவர்கள் எப்படி ஓர் ஞானியை அடையாளம் காண முடியும்? எதை வைத்து அவர் ஞானி என்று கண்டறிய முடியும்?

நமக்கு தேவையானது எது என்று தெரியாமல் எப்படி தேவையானதை அடைய முடியும்?

உண்மையில் ஞானம் என்பது நமக்குத் தேவைதானா?

என்னவென்றே தெரியாத ஞானத்தை அடைந்து என்ன செய்யப் போகிறோம்?

உண்மையில் நாம் எதைத் தேடுகிறோம்? நமக்கு என்ன தேவை?

மனதில் பிரச்சினைகள் இல்லாமல் எப்போதும் மகிழ்ச்சியாகவும் மன நிம்மதியாகவும் வாழவேண்டும். இதுதான் அனைவரின் தேவையாக உள்ளது.

மகிழ்ச்சி, நிம்மதி என்ற போர்வையில்

உண்மையில் நாம் அனைவரும் தேடுவது நமது மன நிறைவையே. நாம் அனைவருமே நிறைவைத் தேடி தான் அலைகிறோம்.

'இதைச் செய்தால் கிடைக்குமா... அதை செய்தால் கிடைக்குமா' என்று ஒவ்வொன்றாக செய்து பார்க்கிறோம்.

எதை அடைந்தால் மனதுக்கு நிறைவு கிடைக்கும் என்று ஒவ்வொன்றாக அடைந்து பார்க்கிறோம்.

எதிலும் நிரந்தர மகிழ்ச்சி என்பது இல்லை. நமது தேடுதலும் முடிந்த பாடு இல்லை.

நிறைவு என்பது மகிழ்ச்சியோ, கொண்டாட்டமோ, ஆனந்தமோ அல்ல.

நாம் நிறைவை மகிழ்ச்சியிலும் கொண்டாட்டத்திலும் ஆனந்தத்திலும் தேடி அலைந்து கொண்டிருக்கிறோம் ஆனால் கிடைப்பது துன்பமும் துக்கமும் துயரமும்.

உண்மையில் நிறைவு என்பது ஒரு முழுமையை குறிக்கிறது. முழுமையை அடையவே ஒவ்வொன்றிலும் தேடுகிறோம். அதுவரை எவருடைய மனமும் ஓயாது.

அதேசமயம் தேடுதலால் ஒருபோதும் முழுமையை அடைய முடியாது. காரணம் தேடுதல் என்பதே முழுமையில் ஏற்பட்ட பிளவு தான்.

நாம் ஒவ்வொருவரும் நிறைவு என்பதை அடைய வேண்டிய ஒரு நிலையாகத் தேடி அலைந்து கொண்டிருக்கிறோம். நிறைவை பெறும் வரை எவரும் ஓய மாட்டோம். அப்படி நிறைவைத் தேடி பல உலக விஷயங்களை நாம் அறிந்து கொள்கிறோம்.

அப்படி அறிந்து கொள்ளப் படுவதை தான் அறிவு என்று கூறுகிறோம்.

உலகை அறிந்து கொண்ட அறிவு, தன்னையே அறிந்து கொள்ளும்போது அது மெய் அறிவாக மலர்கிறது. மெய் ஞானமாக மலர்கிறது. இதுவே தன்னை அறியும் ஞானம். (Self Realisation).

தன்னை அறியும் அறிவே தேடுதலை முடிவுக்கு கொண்டுவருகிறது.

நாம் பெற்ற ஞானத்தை மற்றவர்களிடம் நிரூபிக்க வேண்டிய அவசியம் இல்லை. நமக்குள் உறுதி செய்து கொண்டால் போதும்.

இந்த ஞானம் பெற்ற பிறகே அகத் தேடல் முடிவுக்கு வருகிறது. தேடுதல் அற்ற மனமே நிறைவான மனம்; முழுமை பெற்ற மனம். முழுமை பெற்ற மனமே விடுதலையோடு இயங்குகிறது. விடுதலையோடு இயங்கும் மனதில் எந்த எண்ணங்களும் உணர்வுகளும் நிலைத்திருப்பதில்லை. இதுவே முக்தி - விடுதலை.

நமது மனப் பிரச்சினைகளை, துன்பங்களை, துயரங்களை போக்கும் தன்னை அறியும் ஞானத்தைதான் (Self Realisation) ஸ்ரீபகவத் அய்யா அவர்கள் எளிதாக்கி புரிதலாக வழங்கி வருகிறார்கள். இது மனித குலத்துக்கே மிகவும் அத்தியாவசியமானது.

இதை அனைவருக்கும் எடுத்துச்செல்லும் பணியே நமது பணி.

அந்த வகையில் சேலம் ஸ்ரீபகவத் பவனில் ஜுன் 23ஆம் தேதி முதல் 26ஆம் தேதி வரை ஞான முகாம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. பலரும் கலந்துகொண்டு பயனடைந்தனர். இதில் ஞானத்தோடு சேர்த்து உடல் ஆரோக்கியத்துக்கு தேவையான மூச்சுப் பயிற்சியையும் கற்றுக் கொடுத்தார் ஸ்ரீபகவத் ஐயா.

இதனை தொடர்ந்து ஆகஸ்ட், செப்டெம்பர் மாதங்களிலும் ஞான முகாம்கள் நடைபெற உள்ளன. இதன் விபரம் இந்த மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. அனைவரும் கலந்து கொண்டு பயனடைய வேண்டுகிறோம்.

புரிதலை பகிர்வோம்!
புனிதமாகப் பிரவகிப்போம்!!



## சேலத்தில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 3 நாள் நேரடி ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம், சேலம் ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

நாள் : 10-09-22 காலை 9.00மணி முதல்
12-09-22 மதியம் 3.00மணி வரை.

இடம் : சேலம், ஸ்ரீபகவத் பவன்,
ஜருகு மலை அடிவாரம்,
கொடம்பைக்காடு, பெரிய கவுண்டாபுரம்,
காரிப்பட்டி (Po), சேலம்.

**முகாம் கட்டணம் : ரூ. 5000/- நபருக்கு**

1) ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 09-09-22 வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்குக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.

2) ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளது.

**தனி அறை வேண்டுபவர்களுக்கு**

(ஐ) ஒருவர் தங்கும் அறை- 8மட்டும் உள்ளது.

(ஐஐ) இருவர் தங்கும் அறை 8மட்டும் உள்ளது.

இதற்கு தனிக் கட்டணம் செலுத்த வேண்டுகிறோம்.

குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் முன் பதிவு அவசியம்.

75 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். எனவே முன் பதிவு செய்ய வேண்டுகிறோம்.

**முன் பதிவுக்கு**

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை, ஆதார் Xerox copy உடன் Sep Gnana Muham என Type செய்து Whatsappல் அனுப்ப வேண்டிய எண்: 9942219065.

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bankல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission**
HDFC Bank A/c No.15907620000075
NEFT IFSC : HDFC0001590

**Sri Bagavath Mission**
SBI Bank A/C No. 31784345329 IFS Code:
SBIN0012772

**Google pay +918531036977**

**வழித் தடம் :** Google Map-ல் Sri Bagavath Bhavan என Search செய்தால் Route Map கிடைத்து விடும். சேலம் ஜங்சன் இரயில் நிலையம் - புதிய பேருந்து நிலையம் - ஆத்தூர் வழி அயோத்தியாபட்டிணம் பஸ் ஸ்டாப் - பெரியகவுண்டாபுரம் செல்ல மினி பஸ் (அ) ஆட்டோ கிடைக்கும்.)

பெரிய கவுண்டாபுரம்-(கொடம்பக் காடு) ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரம்.

அன்புடன்,
**ஸ்ரீ பகவத் மிஷன்,**
சேலம்-636003.
**7904118421, 9994205880, 9789165555**

# ஜென் கதை

## எங்கே ஒப்படைப்பது ?



ஜென் ஞானி ஒருவரிடம் இப்படிக் கேட்கப்பட்டது - "நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய கொள்கை என்ன?"

"பசித்தால் உண்பேன், படுத்தால் உறங்குவேன்' என்றார் ஞானி.

இவரைப் பெரிய ஞானி என்கிறார்கள். இவரானால் ரொம்பவும் பாமரத்தனமாகப் பதில் சொல்கிறாரே! திகைத்தான் கேள்வி கேட்டவன். நம்மிடம் எதையாவது மறைக்கிறாரோ என்றுகூட நினைத்தான். "சரி, உங்களுடைய தனித்தன்மை என்று எதுவும் கிடையாதா?" வினவினான்.

"ஆமாம்" என்றார் ஞானி.

"ஆக எல்லோரும் செய்வதைத்தான் நீங்களும் செய்கிறீர்கள் இல்லையா?" வந்தவன் அவரை மடக்கி விட்டதாக எண்ணிக் கொண்டான்.

ஞானி, அவரை கையமர்த்தினார். "ஒரு சின்ன வித்தியாசம். நீங்கள் சாப்பிடும்போது எங்கெங்கோ மனதை அலையவிட்டுக் கொண்டிருப்பீர்கள். நான் சாப்பாட்டில் மட்டுமே கவனமாக இருப்பேன். உங்களுக்கு சடுதியில் தூக்கம் வராது. கவலைகளில் கண்மூட முடியாமல் தவிப்பீர்கள். எண்ணங்களின் தொல்லை இருக்கும். எனக்கு அப்படி இல்லை. படுத்ததுமே உறக்கம் வரும். எவ்வித இடர்ப்பாடும் இன்றி நிம்மதியாக உறங்குவேன்" என்றார்.

"பசி எடுத்து உண்ண முடிகிறதே. நினைத்த இடத்தில் நினைத்த பொழுதில் உறங்க முடிகிறதே! ஒருவனுக்கு இதைவிட வேறென்ன வேண்டும். உடம்பும் மனதும் முழு ஆரோக்கியத்துடன் இருந்தாலல்லவா இது சாத்தியம்!" என்றார் ஞானி.

அவன் ஞானியிடம் கேட்டான், "நானும் இப்படி இருக்க என்ன செய்ய வேண்டும்? எண்ணங்கள் தொந்தரவு செய்கின்றன. படுத்தவுடன் உறக்கம் வர மாட்டேன் என்கிறது" என்றான்.

ஞானி, "எதுவும் செய்ய வேண்டாம். அனைத்து பொறுப்புகளையும் ஒப்படைத்துவிடு" என்றார் ஞானி.

அவன், "எங்கே ஒப்படைப்பது? யாரிடம் ஒப்படைப்பது?" என்று கேட்டான்.

ஞானி, "உன் மனம் சம்பந்தப்பட்ட அனைத்தையும் முழு மனதிடமே ஒப்படைத்துவிடு" என்றார் ஞானி.

கேள்வி கேட்டவன் நன்கு புரிந்து கொண்டு வேலையற்று விடுதலையானான்.

வாழ்க்கையை இயற்கையோடு வாழ்பவர்கள் பாக்கியவான்கள். அவர்களே சிறந்த படைப்பாளிகள். அவர்களுக்கு வாழ்க்கையே தவமாகிவிடுகிறது. கவிதையாகிறது, ஓவியமாகிறது, இசையாகிறது, வரலாறாகிறது. அவர்கள் இன்னொரு கவிதை புனைய வேண்டியதில்லை, இன்னொரு ஓவியம் வரைய வேண்டியதில்லை. இசைக்கருவியை வாசிக்க வேண்டு மென்பதில்லை. எழுதுகோல் பிடித்து காவியம் படைக்க வேண்டுமென்பதும் இல்லை.

இவர்களே சர்வசாதாரணமானவர்கள்...
சிறந்தவர்கள்...



# நிகழ்ச்சி நிழல்கள்



ஆனைக்கட்டி ஞான முகாமில் கலந்துகொண்டவர்களுடன் ஐயா.



ஸ்ரீபகவத் ஐயாவுடன் யோகா மாஸ்டர்
திரு. தியாகராஜன் குடும்பத்தினர்.



திரைப்படத்துறை Stunt Masters ராம், லட்சுமணன்
அவர்கள் ஐயாவுடன்.



பல வருடங்களாக OCD பிரச்சினையில்
இருந்து விடுபட்ட குழந்தை நல மருத்துவர்
திரு. நமச்சிவாயம் அவர்களுடன்
திரு. சரவணன்





Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555





மகாவீர் இல்லம் மனநல காப்பகத்துக்கு தேவையான பொருட்கள் வழங்கிய போது...








சிந்தனையும் சிந்தித்தலும் ஐந்தாவது பதிப்பு வெளியீட்டின் போது